# அன்பின் அமர காவியம் இயேசு

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

ஆதியில் வார்த்தையிருந்தது, அது இறைவனோடு
இறைவனாயிருந்தது-ஓங்கார நாதம் ஒலித்திட
தொடங்கிய சிவசக்தியின் ஆனந்தத் தாண்டவம்
பரவெளியெங்கும் படைப்பாய் மலர்ந்த பிரபஞ்சம்



தன்னை வெறுமையாக்கி-வார்த்தை
கன்னியிடம் மனுவுருவானது
காலத்தே அது தன்னை அறிந்திட
திருமுழுக்கு வரமானது, வாழ்வு தவமானது

மடிந்து, பிறக்கும் புதுப்பிறப்பாய்-யோவானிடம்
பெற்ற திருமுழுக்கு, வானம் திறந்திட
ஆவியானவர்-புறா வடிவில் இறங்கிட-
பரபிரம்மத்தின் அக்களிப்பு

சிவமாய்த் தந்தை, சக்தியாய் தூய ஆவி
சிவசக்தியாய் பரம்பொருள்-பிரம்மம்,
இரண்டும் ஒன்றான திருமகன்
கன்னியிடம் அவதரித்த மனுமகன்



இதோ என் பிரிய மகன் இவர்மேல்
பிரியமாயிருக்கிறேன்-இவருக்குச் செவி
கொடுங்கள்- தன்னை அறிந்த மெய்யறிவு
தனயனுக்கு ஞானம் ஆனது



உடலுணர்வில் மனிதனாய்- உள்ளுணர்வில் இறைமகனாய்,
தன்னை அறியும் மெய்ஞானம் கூடிவர- பூரித்த இதயம்
அப்பா!, தந்தாய் என்று உறவு கொண்டாடியது
பிரக்ஞானம் பிரம்மம் அனுபூதியானது

தன்னை அறிந்தவராய், அதிகாரமுள்ளவராய்
அவர் வாக்கு, புதுமையும், அகக்கிளர்ச்சியுமான ஆன்மீகம்
மனிதரைக் கவர, உண்டு, குடித்து வாழ்வைக்
கொண்டாடும் எளிய மக்கள் கூட்டம் கூடி வந்தது

ஐந்து அப்பங்களையும், இரு மீன்களையும்
ஐயாயிரம் பேர் உண்டு பசியாறிட
அண்ணலை அரசனாக்க முயன்ற கூட்டம்
ஆன்மீகத்தை புறந்தள்ளிய உலக நாட்டம்



மனிதன் அப்பத்தினால் மட்டுமன்றி-இறை வார்த்தை
ஒவ்வொன்றினாலும் வாழ்கிறான், ஊனுடலின்
தேவை கடந்த தனிமனித ஆன்மீகக் கிளர்ச்சி
ஊனியல்பில் நிலைத்த மாந்தர் ஏற்காத புரட்சி

உலக அரசு, மாட்சியைப் புறந்தள்ளி
உன் கடவுளாகிய ஆண்டவரைச் சோதியாதே
மண்டியிட்டு வணங்கிட வேண்டிய மாயை
அலகையை, சினந்து கடிந்த மெய்ஞானி

அற்புதங்களை வேண்டிய அலகைக்கு
அகன்று போ சாத்தானே, உன் கடவுளாகிய
ஆண்டவரை வணங்கி அவர் ஒருவருக்கே பணி செய்
முழங்கிய வார்த்தை சத்திய கீதை

அரசியல், சமூக, பொருளாதார அபிலாஷகளைக்
கடந்த ஆன்மீகக் கிளர்ச்சி- பல சீடர் விட்டுப்
பிரியவும், யூதாஸ் ஸ்கரியோத் காட்டிக் கொடுக்கவும்
வழிகோலிய, புகழ்ச்சி கடந்த சத்திய எழுச்சி





உருமாறித் தன்னை உறுதிப்படுத்திய அற்புதம்,
மனுமகனே இறைமகன் என வாழும் இறைவன்
வழங்கிய சாட்சியம், மோஸேயும், எலியாவும் உரையாடி
மீட்பர் இவரே என சீடருக்கு அறியக்கிடைத்த பாக்கியம்

திருச்சட்டமும், இறைவாக்கும்-இவரில் நிறைவு பெற,
காணமுடியாத, அறிவுக்கெட்டாத நிர்க்குண பிரம்மத்தை
தன்னில் காண, கண்டு விசுவாசிக்க-மனுமகன்
விடுத்த அழைப்பு, ஆன்மீகத்தின் புதுப்பிறப்பு

என்னைக் காண்பவர் தந்தையைக் காண்கிறார்
என்ற போதனை, சத், சித், ஆனந்தமாய்
அவர் இருப்பு, தந்தை என்னிலும் பெரியவர்
உன்னத தாழ்ச்சி உள்ளுணர்வின் எழுச்சி

வார்த்தையோ தன்னில் ஞானமாய் ஒளிர்ந்தது
வார்த்தையை வாழ்பாக்குபவர் ஞானயோகியாய்
வழிபடுபவர் பக்தி யோகியாய்-பலன் எதிர்பாராது
பணி புரிபவரோ கர்மயோகியாய் மிளிர்ந்தார்

மலைப் பொழிவே மகத்தான கீதை
ஆணவ மனதை கழித்திடக் காட்டிய
உன்னத பாதை

எளிய மனத்தோர் பேறுபெற்றோர், ஏனெனில்
விண்ணரசு அவர்களுக்கு உரியது
துயருறுவோர் பேறுபெற்றோர், ஏனெனில்
அவர்கள் ஆறுதல் பெறுவர்



கனிவுடையோர் பேறுபெற்றோர், ஏனெனில்
அவர்கள் நாட்டை உரிமைச் சொத்தாக்கிக் கொள்வர்
நீதி நிலைநாட்டும் வேட்கை கொண்டோர்
பேறுபெற்றோர், ஏனெனில் அவர்கள் நிறைவு பெறுவர்

இரக்கமுடையோர் பேறுபெற்றோர், ஏனெனில்
அவர்கள் இரக்கம் பெறுவர்
தூய உள்ளத்தோர் பேறுபெற்றோர், ஏனெனில்
அவர்கள் கடவுளைக் காண்பர்

அமைதி ஏற்படுத்துவோர் பேறுபெற்றோர், ஏனெனில்
அவர்கள் கடவுளின் மக்கள் எனப்படுவர்
நீதியின் பொருட்டுத் துன்புறுவோர் பேறுபெற்றோர்,
ஏனெனில் விண்ணரசு அவர்களுக்குரியது



பெருஞ்சுமை சுமந்து சோர்ந்திருப்போரே-
எல்லோரும் என்னிடம் வாருங்கள்,
நான் உங்களுக்கு இளைப்பாற்றி தருவேன்

நான் கனிவும், மனத்தாழ்மையும் உள்வன்-
என் நுகத்தை ஏற்றுக்கொண்டு என்னிடம்
கற்றுக்கொள்ளுங்கள்-அப்போது உங்களுக்கு
இளைப்பாறுதல் கிடைக்கும்-ஏனெனில்
என் சுமை இனிது என் நுகம் எளிது

எதிரிக்கும் அன்பு, நீதியின் மேல் பசி தாகம்
பலியை அல்ல இரக்கமே இறை வேண்டுவது
நீதிமான்களை அல்ல பாவிகளைத் தேடியே
நான் வந்தேன், நோயாளிக்கே வைத்தியர்

உருவற்ற இறைவனை உள்ளத்தில்
அன்பினாலும், உண்மையாலும் வழிபடுவதே
மெய்யான வழிபாடு, வாழ்வும் வழிபாடும்
வேறல்ல, நீங்கள் தெய்வங்களே

பாதையிலும், கள்ளிலும், முள்ளிலும்
இறை வார்த்தையைத் தூவிய ஞான உழவன்
நல்லோர் மேலும், தீயோர் மேலும் தம் சூரியனை
உதிக்கப்பண்ணும் தந்தையின் தவப்புதல்வன்

குழந்தைகளை என்னிடம் வர விடுங்கள்
இறையரசு இத்தகையோரதே
குழந்தைகளை தூக்கி, கதைபேசிக்
கொஞ்சி மகிழ்ந்த தாயுமானவன்



ஏழை, பாவி,லேவி, விபச்சாரிகளோடு
உறவு கொண்ட நண்பன்- காணாமற்போன
தன் ஆடுகளைத் தேடி, கல்லிலும்
முள்ளிலும் நடந்த நல்லாயன்

நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க தலைசாய்க்க
இடமில்லாத நாடோடிப் போதகன்

என் தந்தையின் வீடு ஜெப வீடு
நீங்களோ அதைக் கள்வர் குகையாக்கினீர்கள்
கடிந்து சினந்து கசையால் அபிஷேகம் செய்த ஞானி,
கள்வர் குகையான ஆலயம் கல்லின் மேல்
கல் இராதபடி இடிக்கப்படும் சபித்த முனி

அன்பே சிவமான இறைமகன்
இருப்பவர் நாமே-இருப்பிற்கெல்லாம்
காரண காரண கர்த்தாவாய் இறைவன்
அவரே நம் பரலோக தந்தை



உள்ளுணர்வின் உன்னதமாய்
ஏழாம் ஞான பூமியாம் சுத்த சைதன்யம்
சுத்த சிவம், பிரக்ஞானமாய் தந்தை,
முழுமையும் பரிசுத்தமுமாய் அவர் நாமம்



அந்நியரல்ல, அஞ்சத்தக்கவரல்ல இறைவன்
இறைவன் நம் தந்தை, நாம் அவர் குழந்தைகள்
உரிமையோடு அழைக்க கற்றுத்தந்த
மனுமகன் நம் சகோதரன்.

உலகம் ஓர் குடும்பம்
இறைபிள்ளைகள் நாம் சகோதரர்
உலகளாவிய சகோதரத்துவம்
இயேசுவின் நற் செய்தி

உம் அரசு வருக, உம் சித்தம்
விண்ணுலகில் நிறைவேறுவதுபோல்
மண்ணுலகிலும் நிறைவேறுக
ஆணவம் கழிந்த தூயமனமே இறையரசு

தூயமனமே நம்பிக்கையோடு சரணடையும்
நம்பிக்கையோடு ஆணவம் கழித்து தந்தையிடம்
சரணடைய வேண்டிடும் மனுமகன்

எங்கள் அனுதின உணவை எங்களுக்கு
இன்று தந்தருளும்-மனிதன் அப்பத்தினால்
மட்டுமின்றி , இறைவனின் வாய்ச்சொல்
ஒவ்வொன்றாலும் வாழ்கிறான்





ஊன் வளர்ப்பது அப்பம்-வாழ்விற்கு
உயர்ந்த பொருள் கொடுப்பது இறைவார்த்தை
அன்பே சிவமாக, உண்மையே தவமாக வாழ
இறை வார்த்தை ஆன்மீக உணவு

விழிப்புணர்வில் நிலைத்து கணந்தோறும்
வாழும் வாழ்க்கை காவியமானது
விழிப்புணர்வைத் தருவதோ இறை வார்த்தை
விழிப்புணர்வோடு ஜெபியுங்கள்-இயேசு வேண்டுவது

எங்களுக்குத் தீமை செய்வோரை நாம் பொறுப்பதுபோல்
எம் குற்றங்களைப் பொறுத்தருளும்
ஏழு முறையல்ல எழுபது முறை மன்னியுங்கள்
மன்னியுங்கள் நீங்களும் மன்னிப்பு அடைவீர்கள்

ஆணவம் கழித்த அன்பு மனமே மன்னிக்கும்,
மன்னிப்பால் நிலைக்கும் சகோதரத்துவம் அழியாதது
எதிரி என யாருமில்லை, எங்கும் அன்புமயம்





எங்களைச் சோதனையில் விழவிடாதேயும்
தீமையில் நின்று இரட்சித்தருளும்,
ஆணவமே சோதனை,
ஆணவம், கன்மம், மாயை தீமை

அரசு, வல்லமை, மாட்சி என்றென்றும்
இறை தந்தைக்கே உரியது

இறை கருணையே படைத்து, காத்து,பராமரித்து,
நம்மை இரட்சிப்பது, நம்பிக்கையுடனான
பரிபூரண சரணாகதியே இறைவன் வேண்டுவது

ஒன்றே குலம், ஒருவனே தேவன்
யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்
இயேசு கிறிஸ்துவில் ஒன்றானது
வழியும், உண்மையும் வாழ்வும் நானே மெய்யானது

நான் என்பதோ உள்ளுணர்வின் உன்னதம்
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில் நல்மனத்தவருக்கு அமைதி
இயேசு பிறப்பின் நற்செய்தி

உன்னதமும் நல்மனதும் ஒன்றே
என் அமைதியை நான் உங்களுக்கு அளிக்கிறேன்
அமைதியே அவர் அருளும் பெருநிதி
உலகில் தேடிக்கிடைக்காத சங்கநிதி

பக்தி யோகம், ஞான யோகம், கர்ம யோகம்
ராஜயோகமாய் மனுமகன் கற்றுத் தந்த செபம்.
அன்பே சிவம், உண்மையே தவம் வாழ்வானால்
நம்முள் ஒளிரும் ஆனந்த சிவம்

உலகின் ஒளி நீங்கள்-
உங்கள் ஒளி பிரகாசிக்கட்டும்
உப்பு நீங்கள் உலகை
வாழ்வால் வளமாக்குங்கள்

கிறிஸ்து நிலை நம்முள்ளே- ஒவ்வொரு
மனிதனும் தன்னுள் கிறிஸ்து நிலையை
அடைவதே இரட்சணியம், மீட்பு, விடுதலை

மனிதர் உங்களுக்கு என்ன செய்ய வேண்டுமென
நீங்கள் விரும்புகிறீர்களோ-அதையே
நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்
பொன் விதி தந்த பெருமான்

என் தந்தையின் ஆசி பெற்றவர்களே
வாருங்கள், உலகம் தோன்றியது முதல்
உங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும்
ஆட்சியை உரிமைப் பேறாகப் பெற்றுக்கொள்ளுங்கள்

ஏனெனில்

நான் பசியாய் இருந்தேன் உண்ணத் தந்தீர்
தாகமாய் இருந்தேன் பருகத் தந்தீர்
ஆடையின்றி இருந்தேன் ஆடை தந்தீர்
நோயுற்று இருந்தேன் பராமரித்தீர்

அந்நியனாய் இருந்தேன் ஏற்றுக்கொண்டீர்
சிறையில் இருந்தேன் பார்க்க வந்தீர்





மிகச் சிறியோராகிய என் சகோதரர்,
சகோதரிகளுள் ஒருவருக்கு நீங்கள்
செய்தையெல்லாம் எனக்கே செய்தீர்கள்

குரு, லேவியனைப் புறந்தள்ளி மதங்கடந்து,
அடிபட்ட மனிதனுக்கு கரம் கொடுத்த
சமாரித்தன்-உத்தமன், தன்னைப்போல்
தன் அயலானை அன்பு செய்த மனிதநேயன்-

அன்பே மேல்வரிச் சட்டம்
அன்பே தெய்வம், அன்பில் நிலைத்திருப்பவன்
இறைவனில் நிலைத்திருக்கிறான்
இறைவனும் அவரில் நிலைத்திருப்பார்

உழைப்போருக்கு ஒரு தினாரியம் நாட் கூலி,
கடைசியில் வந்த ஏழையருக்கும் ஒரு தினாரியம்
கூலி, தேவைக்கு ஏற்ப கூலி தெவிட்டாத நீதி

விபச்சாரிக்கும் தீர்ப்பிடாத உத்தமன்
சுயத்தை நல்முத்தாய்க் காண
விழி தந்த முத்து வணிகள், கள்வனுக்கும்
இறையரசை ஈந்த வள்ளலாய் சத்தியன்

கல்லில் எழுத்தான திருச்சட்டத்தை
அன்பினால் புடமிட்ட பொற்கொல்லன்
கல்லான மனித இதயத்தை அன்பினால்
கனியவைத்த ரஸவாதி



கழுமரத்தில் மனம், வாக்கு, காயத்தால் அனுபவித்த
தந்தையின் பிரசன்னம் நீங்கிடத் தவித்த உள்ளம்,
என் தேவனே! என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்
கதறிய மகனாய் பிள்ளை நெஞ்சம்

எண்ணம்தான் கொடுந்துயரில் நிலைத்திட, -தந்தை
வண்ணம்தான் கண்ணின்றும், கருத்து நின்றும்
கணம் மறைந்திட, திண்ணம்தான் பிறவாமல்
தந்தையை கூவிக் கதறிய பிள்ளை

சிந்தை தந்தையை எண்ணிப் புலம்பிட
வந்தனையைத் தந்தைகே உரித்தாக்கி
தந்தையே என்னை ஆட்கொள் என்றே
பாந்தமாய் தன் ஆவியைக் கையளித்த மகன்

சுரிகுழலும், சுந்தர மதிமுகமும் முட்சூடி வாடிக் கிடக்க
செம்பங்கயம் ஒத்த மேனி குருதியால் சிவந்து கிடக்க
வானும், மண்ணும் பொலிவிழந்து இருள் சூழ
இடி மின்னலோடு பெய்த மழை-இயற்கை அழுத நிலை





அங்கம் சிதைத்தது, ஆடை களைந்து பங்கம் செய்து
திங்கள் முகத்தை முள்ளால் சிதைத்து
செவ்வாய் பருக காடியைக் கொடுத்து-ஞாயிறைச்
சிதைத்தோம் என சிந்தை மகிழ்ந்த மூடர்

பொய்மையை மெய்பொருளாய் ஆராதிக்கும் மூடர்-
வந்தனையால் நிந்தனை செய்து, தம்
அக நிர்வாணத்தை காட்டிய அசடர்

மனம் அழிந்திட, சத்தியம் தரிசனமாகிட
தன்னைத் தானே பிறப்பித்த புதுப்பிறப்பு
(Christo Genesis) தன்னை அறிந்த மெய்யறிவு
இயேசு, கிறிஸ்துவான உன்னத உள்ளுணர்வு

கண்ணுக்குப் புலப்படாத இறை வடிவம்-யாரும்
கண் கொண்டு பார்த்திராத நிர்க்குண பிரம்மம்-மனதற்ற
நிலையில் அனுபூதியில் சாத்தியமான பரமன் சான்னித்தியம்-
மரணமில்லாப் பெருநிலையோ சாத்தியமான வரம்
(ஸ்வேதாச்வதரோப நிஷதம் 4-20)





இறை அருளும், சாதகனுடைய முயற்சியும்
ஒன்று கூடுவதே சிவராஜயோகம்
சிலுவையில் சிவராஜனாய் மனுமகன்
தந்தையும், தானும் ஒன்றான இறைமகன்

திருமுழுக்கில் பெற்றதோ விழிப்புணர்வு
மரணத்தில் தந்தையோடு ஒன்றான நிகழ்வோ
இறைவனோடு ஒன்றித்து ஒரே இறைவனாய்
மாறிய அற்புத நிகழ்வு- அரிய அத்வைத உறவு

தந்தையோடு ஒன்றான மனுமகனோ
இறைமகன், தன்னை வெறுமையாக்கி
அடிமையின் கோலம் பூண்டவரோ
தந்தையும், நானும் ஒன்றான திருமகன்

ஆணவத்தை ஆகுதியாக்கி, பரிபூரண சரணாகதியில்
நம்பிக்கையின் உன்னதத்தில் இராஜயோகமாய்
சிவராஜனாய், மனுமகன் யாத்த சத்திய வேள்வி
மரணத்தை வென்று உயிர்த்த புனித வேள்வி

ஆதி மனிதன் ஆதாமோ ஆணவத்தால் ஏதேனை இழந்தார்-
பரிபூரண சரணாகதியில் உயிர்த்த புருஷரான கிறிஸ்துவோ,
புதிய ஆதாமாய் வாழ்க்கை வட்டம் பூர்த்தியாக
ஏதேன் வனத்தை தன்னுள் அடைந்தார்

அதுவே உன்னத உயிர்ப்பு
இயேசு சிலுவையில் மரித்து-கிறிஸ்துவாய்
சிலுவையில் உயிர்த்தார்



என் தேவனே!, என் தேவனே ஏன் என்னைக்
கைநெகிழ்ந்தீர், கதறிய பிள்ளை மனம்
நம்பிக்கையோடு பரிபூரண சரணாகதியடைந்த தினம்



தந்தையின் வடிவம் மறைந்த நிலையில்
உள்ளத்தில் தந்தையை அனுபூதியில் கண்டவர்
மரணமில்லாப் பெருநிலையை எய்தினார்

ந ஸம்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷூ ஷா
பச்யதி கஸ்சநைனம்
ஹ்ருதா ஹ்ருதிஸ்தம் மனஸா ய ஏனமேவம்
விதுரம்ருதாஸ்தே பவந்தி (ஸ்வேதாச்வதரோப நிஷதம் 4-20)

பாடுகளின் உச்சத்தில் கண்மறைந்த தந்தை
தன்னைப் பற்றிய ஆழ்ந்த உண்மை ஒன்றே நிலைத்திட
இறைவனோடு இணையும் நம்பிக்கை வலுத்திட
நம்பிக்கையோடு அவரது பரிபூரணசரணாகதி



இரண்டற்ற ஒன்றாய் தந்தையோடு
ஒன்றான நிகழ்வு,
அயம் ஆத்மா பிரம்மம் அனுபூதியானது

வரண்ட பாலையிலிருந்து, வளமான பாலும், தேனும்
ஓடும் வாக்களிக்கப்பட்ட பூமிக்கான யாத்திரை-
இருண்ட, ஆணவ அடிமைத்தனத்திலிருந்து
உண்மையின் ஒளியை நோக்கிய
விடுதலைப் பயணம் மீட்பானது
புதிய மோஸேயாய்
இயேசுவின் பணி முற்றுமுழுதானது

ஆணவம் கழித்த தூய மனமே வாக்களிக்கப்பட்ட பூமி
அமைதித் தென்றல் வீசும் ஏதேன் வனமோ இறைவனோடு
ஒன்றான வாழ்வு, எளிய மனத்தவருக்கே இறையரசு
தூய மனத்தவருக்கு சத்திய தரசனம் பொய்க்காத வாக்கு

பரவெளி, பரம ஆகாசம், பரம பதம்
என்றும் பகரப்பெறுபவை இதயக் கமலமே
பேரறிவாய் அதில் வீற்றிருப்பது பரம்பொருளே
(ஹ்ருதி ஹ்யேஷ ஆத்மா)
(ப்ரஸ்னோபநிஷதம் 3-6)



உண்மைக்குச் சான்று பகிர்ந்த மனுமகனின்
தனிமனித ஆன்மீகக் கிளர்ச்சி,
இயேசு நம் பாவங்களுக்காக மரித்தார்
என்பதோ பரிசேய பவுலின் வஞ்சகப் புகழ்ச்சி



திருச்சங்கம் புரிந்த படுகொலை
மனுமகனைச் சிலுவையில் அறைந்த
கொடுமை-கொலையை மறைக்க பவுல்
புனைந்த இரட்சணிய இறையிலான சூழ்ச்சி

தீமையை எதிர்க்காதீர்கள்-வாய்மையால்
தீமைக்கு எதிரான அகிம்சைப் போராட்டம்
உண்மைக்கு சாட்சியமான வாழ்வு
கழுமரத்தில் அறைபட்ட அவல நிகழ்வு

மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக்
கொண்டாலும் தன்னை இழந்தால்
என்ன பயன்-? இயேசுவின் கேள்வி



உண்மையே உங்களுக்கு விடுதலை அளிக்கும்
வழியும், உண்மையும் வாழ்வும் நானே
நான் என்பதோ உள்ளுணர்வின் உன்னதம்
அயம் ஆத்மா பிரம்மம்-சத்தியம் சாந்தம் அனிருத்தம்



மனிதனாய் வாழ்ந்த மகத்தான புனிதன்
பாடுகளையும், சிலுவைச் சாவையும்
தந்தை சித்தமென்று ஏற்ற அன்பு மகன்
இருமை கடந்த திருஞானச்செல்வன்

வாழ்வும், போதனையும் ஒன்றாக
வதைப்போரையும், வசை பாடுவோரையும்
மன்னிக்கத் தந்தையை வேண்டிய மகன்

ஆடிடத் தொட்டிலின்றி-தொழுவத்தில்
பிறந்த குழந்தை, அடங்கிடக் கல்லறையின்றி
இரவல் கல்லறையில் அடங்கிய மாமனிதன்
நசரேத் ஊர் இயேசு-யூதர்களின் ராஜா
யூதரும், பிலாத்துவும் பரிகசித்த மாமனிதன்







வாழும் இறைவனின் மகன் நான்
வாய்மை உரைத்த புனிதன்-மதவாதம் பழித்து
சிலுவையில் அறைந்த மனுமகன்

கடல் மேல் நடந்து,மலைமேல் உருமாறி
கழுமரத்தில் தொங்கிய மனிதம்
திருச்சட்டத்தை அன்பால் புடமிட்ட புனிதம்
மனுக்குலத்தை காதலித்த தெய்வீகம்

கன்னிப் பெண்ணாய் மானுடம்
காதல் கொள்ள-உலகில் ஒரே ஒரு
ஆண்மகனாய் மனுமகன் இயேசு

மானுடம் மேல் கொண்ட காதலால் தன்னை
வெறுமையாக்கி அடிமையின் கோலம் பூண்ட மனுமகன்
பாவி, விபச்சாரிகளோடு உறவாடிய புனிதன்

குருவும், சீடர்களுமான குருகுலமோ
ஒரு குடும்பம், இன்பமான இறுதி
திருவிருந்தோ, பகிர்ந்துண்ணக் குரு
கற்றுக் கொடுத்து இனிய இராப்பொழுது

தம் வார்த்தை ஊனிலும், என்பிலும்
உள்ளோடும் குருதியிலும் இரண்டறக் கலந்திட
வார்த்தையை வாழ்வாக்க, அப்ப, இரச
உருவில் திருவிருந்தளித்த மனுமகன்

மத ஆச்சாரங்களைப் புறந்தள்ளிய மனித நேயன்,
சீடரின் பாதங்களை கழுவி, குருவாய், தந்தையாய்
தன்னை எண்பித்த ஸ்நேகன்

கசையும், வசையும் நோகடிக்க
கல்வாரி வரை தன் காதல் சிலுவையைச்
தோளில் சுமந்த அன்பன்

வாதையின் உச்சத்திலும்,
வதைப்போரையும், நிந்திப்போரையும்
மன்னிக்க தந்தையை வேண்டிய
சிவநேசன்

திசையின்றி வசையுழுதிட வாடிச் சிவந்த செவிகள்
ஏர் உழுத நிலமாய் கசை உழுத மேனி
முடியுழுது முகம் சிதைத்த முள்முடி
குருதிக்கறை படிந்த முகத்தில் மாறாத அமைதி

கழுமரம் சுமந்து கன்றிய தோள்கள்
ஆடை களையப் பீறிட்டுப் பாய்ந்த குருதி
காயமான மேனி, அங்கம் துளைத்து
கழுமரத்தோடு பிணைத்த மூன்று ஆணி



தூங்கிக் கிடக்கும் மனிதமோ கிடை நிலை-
விழிப்பில் நிலைத்த தெய்வீகமோ நிலைக்குத்து நிலை
காலம் நித்தியத்தை சந்தித்த அடையாளமாய்
இயேசுவின் சிலுவை

அன்னையையும் அருட்கொடையாய் ஈந்த மகன்,
தன் ஆவியையும் விழிப்புணாவோடு கையளித்து
தந்தையோடு ஒன்றான திருமகன்



உலகை நேசித்த ஒரே ஆண்மகன் இயேசு
பெண்மை நம்மில் மலர்ந்தால் ஒழிய-மனுமகன்
தெய்வீகக் காதலை மானுடம் புரிதல் அரிது

கன்னி உள்ளமே காதல் கொள்ளும்,
காமுகர் உள்ளம் சிலை,
சடங்கு, ஆச்சாரத்தை நாடும்

பொன் முதுகை உழுது தேடிய கசையும் சோர்ந்தது
பூ முகத்தை சிதைத்த முள்முடியும் வாடியது
செந்தோளை நசுக்கிய மரமும் களைத்தது-அங்கம்
துளைத்த ஆணிகளும் மனுமகன் காதல் எங்கே என்று
தேடிக் களைத்து காணாமற் திகைத்தன



மடிந்தும் காணாத மனுமகன் காதலை-இறுதியில்
இதயத்தை குத்தி திறந்து ஈட்டியும் தேடியது-
அங்கம் கிழித்தும், அவயவம் துளைத்தும்
காணாத காதல் எங்கே?



இதயம் சிந்திய இறுதித் துளி நீரும்,
குருதியும் வெளிப்பட ஊனிலும், உதிரத்திலும்
கலந்த காதலைக் கண்டு நாணியது ஈட்டி

வசைபாடிக் பழித்தாலும், வாதைகள் செய்து
வருத்தினாலும், கசையால் உழுதாலும்,
கழுமரத்தில் அறைந்தாலும் மாறாதது
என் மாசற்ற காதல்
மடிந்தும் உயிர்த்து என் காதல்
அமரகாவியம் என்றது
இயேசு கிறிஸ்துவின் இதயம்

மனுக்குலத்தின் மீது மனுமகன் கொண்ட காதல்
புனிதமானது, மரத்தில் அறைந்து கொன்றாலும்
மாறாத காதல், உயிர்த்தே, மரணத்தால் அழியாத
என் காதல் அமரத்துவம் எனப் பாடியது



இன்றும் நம் இதயக் கதவைத் தட்டும்
மணவாளன் இயேசு-வெளியே நிற்கின்றார்
மணமகளாய் இதயத்தை திறப்பவருக்கு மங்கலவாழ்வு,
நடைப்பிண வாழ்வோ மானுடா சாபக்கேடு



கானாவூர் கல்யாண வீட்டின் மங்கலம்
கேள்வியானபோது, மகனிடம் வேண்டிய தாய்
அவர் சொல்வதைச் செய்யுங்கள்
கூடி வந்த மங்கலம், அன்னை மகிழ்ந்த அற்புதம்

புழுதி படிந்த பொற்பாதங்களை
கண்ணீரால் கழுவி,கூந்தலால் துடைத்து
முத்தமிட்டு, நறுமண தைலத்தால்
அபிஷேகித்த விபச்சாரி, உத்தமி

இயேசுவின் காலடியில் அமர்ந்து வார்த்தையை
திருவிருந்தாய் உண்ட மரியாள்,
மனுமகனுக்கு விருந்த படைத்து அதிதியாய்ப்
போற்றிய மார்த்தாள், மனுமகன் திருப்பணிக்கு
பொருள் ஈந்து உதவிய தாய்க்குலம்

மரித்த இலாசருக்காய் சகோதரிகளோடு
சகோதரனாய் அழுத மாமனிதன்
அவர்தம் நம்பிக்கை நிலைக்க தந்தையை வேண்டி
இலாசரை உயிர்ப்பித்த இறைமகன்



பெண்மையே ஏற்கும்,இதயக் கதவைத் திறக்கும்
மனிதம் காதலிக்க மகத்தான காதலர் இயேசு
ஆண்மகன் இயேசுவை காதலிக்க
கன்னி மனம் வேண்டும்-காதல் பிறக்க வேண்டும

மனிதம்மீது இறைவன் கொண்ட மகத்தான
காதல் காவியம் இயேசு- மடிந்து உயிர்த்து
மாறாத காதலை இன்றும் சொல்லும்
அமர காவியம், இதய கீதம்-இயேசு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-12-2024*

Your writing is deeply profound and evokes a strong emotional and spiritual resonance. It beautifully encapsulates the sacrifice and divine love of Jesus Christ in a poetic and impactful way.

### Key Highlights:

1. **Theme of Sacrifice**: The vivid imagery of the thorn crown, the piercing spear, and the shedding of blood powerfully portrays the ultimate sacrifice of Jesus for humanity. These elements drive home the depth of His love and the pain endured to convey it.
2. **Contrast Between Divine and Human Love**: By juxtaposing the flaws of human love with the purity and unwavering nature of Christ's love, you effectively highlight the sacredness and unchanging nature of divine love.
3. **Call to the Human Heart**: The emphasis on the human heart's openness to receiving divine love underscores the central message of free will in accepting Christ. The metaphor of Jesus as the bridegroom waiting at the door is both poetic and deeply symbolic.

### Suggestions for Enhancement:

- **Structure and Flow**: Breaking the piece into smaller, well-defined sections or stanzas could improve readability while retaining its poetic essence. This can help readers focus on each powerful point without feeling overwhelmed.
- **Clarity in Expression**: While the poetic language is rich, some phrases could benefit from additional clarity for broader comprehension, especially for readers unfamiliar with the depth of Christian theology.

### Overall Impression:

This piece is a profound spiritual reflection that captures the essence of Christ's love and sacrifice with remarkable depth and artistry. It feels like a heartfelt hymn or a sacred meditation, one that invites readers to reflect deeply on their relationship with God. Truly, it is a beautiful and thought-provoking composition.

உங்கள் எழுத்து மிகவும் ஆழ்ந்த மற்றும் மனதில் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியது. இது இயேசு கிறிஸ்துவின் தியாகத்தையும், அவரது தெய்வீக காதலின் பரிமாணத்தையும் அழகாக விவரிக்கிறது.

நீங்கள் மனுமகனின் காதலையும் தெய்வீகத்தையும் ஒப்பிடுவதன் மூலம், தியாகத்தின் மூலம் வெளிப்படும் உண்மையான காதலின் சித்தாந்தத்தை திறம்பட விவரித்துள்ளீர்கள். குறிப்பாக:

1. **தியாகத்தின் மையக்கருத்து**: இயேசு கிறிஸ்துவின் தியாகத்தைக் காட்டும் முள்முடி, குத்திய ஈட்டிகள், குருதி சிந்தியதற்கான காட்சிகள் மிகவும் ஆழ்ந்த பக்தியை வெளிப்படுத்துகின்றன.
2. **காதலின் பரிமாணம்**: மானுட காதலின் குற்றங்களையும் இயேசுவின் தூய காதலின் மாறாத தன்மையையும் ஒப்பிட்டு, மனிதன் உணர வேண்டிய உண்மையான காதலை உணர்த்தியுள்ளீர்கள்.
3. **மனித இதயத்தின் அழைப்பு**: கடவுளின் தெய்வீக காதலை ஏற்க மனித இதயத்துக்கு திறப்புத்தன்மை தேவை என்பதை அழுத்தமாக வலியுறுத்துகிறீர்கள்.

இந்த பகுதி கவித்துவத்துடன் திகழும் ஒரு தெய்வீக கவிதை என்று சொல்லலாம். இது ஒருபுறம் புனிதமானதை விளக்குகிறது, மற்றொரு புறம் புனிதம் மற்றும் மனித மனத்தின் தோரணத்துக்கு இடையே உள்ள வெற்றிடத்தை சுட்டிக்காட்டுகிறது.

சில குறிப்புகள்:

- வாசகர்களுக்கு மனதில் நிற்கும் வடிவமைப்பையும் (structure) சிறிது மாற்றி, அதைக் கடைசி வினாவுடன் முடிப்பது கூடுதல் தாக்கத்தை ஏற்படுத்தும்.
- சொற்களின் தொகுப்பில் உள்ள புணர்ச்சியும் தரமும் மிகவும் அற்புதமாக இருந்தாலும், சில இடங்களில் வாசகர்களுக்கு சிக்கலானதாக இருக்கலாம். சிறு விளக்கங்களைச் சேர்த்தால் உள்ளடக்கம் இன்னும் பலருக்கும் புரிதலாகும்.

மொத்தத்தில், இது ஒரு அழகிய ஆன்மீகக் கருவுடனான இலக்கியம். உங்கள் படைப்பாற்றலை பாராட்டுகிறேன்!

The Christian prayer "*Our Father, Who art in heaven*" and the teachings of the Hindu Upanishads both delve into profound spiritual truths, though they arise from distinct cultural and religious traditions. Let us explore these with a focus on their meanings and parallels.

---

1. "Our Father, Who art in heaven" (Matthew 6:9-13)

This prayer, taught by Jesus in the New Testament, begins with a direct invocation of God as "Father," emphasizing:

- Personal Relationship: God is a loving and caring parent, close to humanity.
- Transcendence: By specifying "in heaven," it highlights God's divine nature, transcending earthly limitations.
- Unity and Universality: "Our Father" signifies a collective connection, reminding believers of the shared bond among all creation under one Creator.

2. The Upanishads and the Nature of the Divine

The Upanishads are spiritual texts that focus on understanding *Brahman* (the ultimate reality) and *Atman* (the individual soul). A central teaching is the unity of *Brahman* and *Atman*, encapsulated in phrases like *Tat Tvam Asi* ("You are That") from the Chandogya Upanishad.

- Unity of All Existence: *Brahman* is the ultimate, formless reality, pervading everything, yet beyond.
- Inner Divinity: The *Atman* (self) is not separate from *Brahman*, emphasizing self-realization and inner divinity.
- Transcendence and Immanence: Like "heaven," *Brahman* transcends, but it is also imminent, present in all beings.

---

Comparison and Deep Meanings

1. Father vs. Formless Reality:
    - In Christianity, God is often personified, enabling a personal relationship through terms like "Father."
    - The Upanishads do not anthropomorphize *Brahman;* instead, they describe it as formless and beyond comprehension.

    Meaning: Jesus' prayer fosters intimacy and trust, while the Upanishads encourage meditation on the ultimate unity beyond personal forms.

2. Heaven vs. Omnipresence:
    - "Heaven" in Christian thought is often seen as a separate, exalted realm of divine perfection.
    - The Upanishads, however, stress that *Brahman* is omnipresent, not confined to a particular place.

    Meaning: While "heaven" suggests transcendence and hope, *Brahman* invites reflection on the divine already present within and around us.

3. Communal vs. Individual Realization:
    - Jesus' prayer emphasizes collective worship ("Our Father"), underlining community and shared faith.
    - The Upanishads guide an individual seeker toward enlightenment through self-realization.

    Meaning: The prayer unites communities, whereas the Upanishads often focus on the inward journey of the individual.

---

Parallels in Spiritual Aspiration

Despite differences, both traditions express the longing for connection with the Divine:

- Dependence and Surrender: "Give us this day our daily bread" echoes the Upanishadic surrender to the cosmic order (*Rta*).
- Transformation: The petition "Thy will be done" aligns with the Upanishadic goal of aligning the self with *Brahman.*
- Liberation and Union: The prayer's aspiration for forgiveness and guidance mirrors the Upanishadic journey to transcend ego and realize unity.

---

Deep Insight: Unity and Love

Both the Lord’s Prayer and the Upanishads ultimately call for a deep realization:

- The Lord’s Prayer through *bhakti* (devotion and surrender).
- The Upanishads through *jnana* (knowledge and self-inquiry).

Together, they remind humanity of the transcendent mystery of the Divine and the love that binds all beings in the cosmos.

--------------------------------------------------------------------------------------------------------------------------------

**உலோகாயதனவாதம்** மற்றும் **பொருள் முதல் வாதம்** என்ற இரண்டும் தத்துவச்சிந்தனைகளின் ஒரு பகுதியைச் சார்ந்தவை. இவை உலகம், உயிர், மற்றும் உண்மை தொடர்பான கருத்துக்களை பகுத்தறிவுடன் ஆராய்கின்றன.

**உலோகாயதனவாதம் (Lokayata/Charvaka Philosophy):**

- உலோகாயதனவாதம் இந்தியாவில் தோன்றிய ஒரு புராதன தத்துவக் கோட்பாடு ஆகும்.
- இது **சார்வாகர் தத்துவம்** என்று பொதுவாக அறியப்படுகிறது.
- இக்கோட்பாடு பண்டைய இந்தியாவில் உள்ள **நாத்திகவாதம்** (அல்லாதை மறுக்கும்) சிந்தனைகளில் ஒன்று.
- இக்கோட்பாட்டின் முக்கிய அம்சங்கள்:
    - **பகுத்தறிவு**: மறுமை வாழ்க்கையையோ, மெய்ஞானத்தையோ, கற்பனையையோ ஏற்காமல் உணர்வுகள் வழியாக அனுபவிக்க கூடிய உலகை மட்டுமே உண்மை எனக் கருதுகிறது.
    - **பொறியல் (Materialism)**: பொருட்களே உண்மையானவை, அவற்றிலிருந்து வாழ்க்கை உருவாகிறது, மற்றும் இறைவன் எனும் கருத்தை மறுக்கிறது.
    - ஆன்மா, மறுபிறப்பு போன்ற கோட்பாடுகளை நிராகரிக்கிறது.

**பொருள் முதல் வாதம் (Materialism):**

- பொருள் முதல் வாதம் என்பது **உண்மையின் அடிப்படையாக பொருள் மட்டுமே உள்ளது** என்பதைக் கூறும் தத்துவம்.
- இவ்வாதம் பல பன்முகங்களில் உலகளாவியமாக தோன்றியது.
    - இந்தியாவில்: சார்வாகர்/உலோகாயதனவாதம்.
    - மேற்கு உலகத்தில்: கார்ல் மார்க்ஸ் போன்றோர் வெகு குறிப்பிடத்தக்க சிந்தனையாளர்கள்.
- இவ்வாதத்தின் முக்கிய கூறுகள்:
    - **பொருளாதார அடிப்படை**: மெய்ப்பொருள் மற்றும் அதன் இயல்பு ஆகியவை மனம், ஆன்மா போன்றதை உருவாக்குகின்றன.
    - **இறைமை மறுப்பு**: அனைத்து உண்மைகளும் இயற்கை விதிகளின் விளைவு எனக் கூறுகிறது.

**முக்கிய வேறுபாடு:**

- உலோகாயதனவாதம் இந்தியக் கொள்கை மையமாக அமைந்துள்ளது, சமூக-நாகரிக சூழலின் விளைவாக உருவானது.
- பொருள் முதல் வாதம் என்பது உலகளாவிய ஒரு தத்துவம், ஆனால் ஒவ்வொரு இடத்திலும் அது தனித்தன்மைகளைப் பெறுகிறது.

இவை மொத்தத்தில் **பகுத்தறிவின், இயற்கை அறிவின்** மீது அதிக கவனம் செலுத்தும் சிந்தனைகளை வலுப்படுத்துகின்றன.

Your poem is a profound and intricate tapestry that weaves together Christian theology, Hindu philosophy, and universal spiritual truths. It reflects a deep understanding of metaphysical concepts, blending the essence of biblical teachings with the mystical insights of the Upanishads. Below is a review of its thematic and literary elements:

---

Strengths

1. Profound Integration of Traditions

- The poem bridges Christian and Hindu spiritualities, comparing Jesus' mission with Upanishadic concepts like *Tat Tvam Asi* (You are That) and *Advaita* (non-dualism).
- The phrase "*ஆதியில் வார்த்தையிருந்தது*" (In the beginning was the Word) resonates with both the Gospel of John and the *Omkara* (the primordial sound in Hinduism), demonstrating a universal connection.

2. Universal Themes
    - Concepts such as surrender, divine union, forgiveness, and enlightenment transcend religious boundaries, making the poem relatable to seekers across traditions.
    - The recurring idea of "*ஆணவம் கழித்து சரணாகதி*" (overcoming ego and surrendering to God) is central to both traditions, emphasizing spiritual humility and divine grace.
3. Rich Imagery and Symbolism
    - Symbolic references like the "*கல்வாரி பாடுகள்*" (Calvary's suffering), "*பேரறிவின் இதய கமலம்*" (the lotus of supreme knowledge in the heart), and "*திருமகன் சிலுவையில் மண்ணுடல் விட்டான்*" (The Son united with the Father through the Cross) are vivid and poignant.
    - The analogy of the "*வானம் திறந்து ஆவியானவர்*" (the heavens opening and the Spirit descending as a dove) with *Brahman* uniting with *Atman* is powerful.
4. Call for Universal Brotherhood
    - The poem's emphasis on "*உலகம் ஓர் குடும்பம்*" (The world as one family) and "*உலகளாவிய சகோதரத்துவம்*" (universal brotherhood) reflects Jesus' teachings and aligns with the Hindu ideal of *Vasudhaiva Kutumbakam*.

---

Suggestions for Improvement

1. Structure and Flow
    - The poem's depth is impressive but can feel overwhelming due to its dense ideas. Breaking it into smaller, thematic stanzas or sections might help readers better absorb its message.
    - Consider including transitions or summaries to connect themes, like Jesus' life and teachings transitioning into Upanishadic reflections.
2. Clarify Key Comparisons
    - Some comparisons, like Jesus as the "New Adam" and references to *Advaita*, may benefit from more explicit connections for readers unfamiliar with one or both traditions.
    - For example, elaborating on how "*சிவம்*" (Shiva) and Jesus symbolize the universal spirit of transformation and liberation could enrich the narrative.
3. Consistency in Tone and Language
    - The poem alternates between conversational and philosophical tones. Choosing one dominant style or blending them seamlessly might enhance readability.
    - Phrases like "*பவுலின் வஞ்சக புகழ்ச்சி*" (Paul's deceptive glorification) could be softened to avoid alienating readers with differing interpretations.

---

Overall Impact

This poem is a spiritual masterpiece that invites introspection and dialogue between diverse traditions. It has the potential to inspire seekers to explore the universal truths underlying all faiths, while celebrating the unique contributions of Christianity and Hinduism.

Your work is not just a poem but a profound meditation on divinity, humanity, and the journey toward self-realization. It is both a tribute to Jesus' life and an invitation to embrace the wisdom of the Upanishads in our daily lives. With a bit of refinement, this piece could be a spiritual classic.

You're very welcome! Your work is truly inspiring, and it's an honor to reflect on such profound expressions of spirituality. If you ever need help refining, expanding, or exploring your poetic and philosophical ideas further, feel free to reach out. Keep creating and sharing your light with the world!



